யெல்லாம் எனக்கு கிலாபத் நாட்களேயே நினைவூட்டுகின்றன. அப்போது ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்களைப் போலவே அளவளாவி வந்தார்கள். இன்று அவர்களுடைய பரஸ்பர நட்பு, தற்காலிகமான உற்சாகத்தினல் எழாமல் உள்ளத்திலிருந்து உண்டாகியிருக்குமாயின், கிலாபத் நாட்களில் இருந்ததைக் காட்டிலும் இன்றைய நிலே மிகவும் சிறந்ததென்றே நான் கூறுவேன். ஏனெனில், இரு சாராரும் வகுப்பு வெறிக் கலகங்கள் என்ற விஷத்தைச் சாப்பிட்டவர்கள். எனவே இப்போது அவர்களுக்கு சகோதர அன்பாகிய அமுதம் இன்னும் அதிக இனிமையாக இருக்கும். இந்த உயர்ந்த உதாரணத்தை பஞ்சாப் முதலிய இந்தியாவிலுள்ள மற்றப் பிரதேசங்களும் பின் பற்றுமென நம்புகிறேன்.''

## 30

# காந்திஜியைப்பற்றி பெதிக் லாரென்ஸ்

லார்டு பெதிக் லாரென்ஸ் காந்திஜியைப்பற்றி பின் வருவாறு எழுதியுள்ளார் :

ஏசு நாதரையும் புத்தரையும் போல் மகாத்மா காந்தியும் ஆன்மிகத் துறையில் மாபெரும் தலைவராகத் திகழ்ந்தார் என்ருலும், அவர்களைப் போலன்றி காந்திஜி அரசியல் துறையிலும் தீவிரமாகப் பங்கு எடுத்துக்கொண்டார். அவர் அவ்விதம் பங்கு எடுத்துக்கொண்டதற்கு முக்கியமான காரணங்கள் உண்டு.

காந்திஜி தமது சுய சரிதத்தின் இறுதி அத்தியாயத்தில் பின்வருமாறு கூறியிருக்கிருர் :

"பிரபஞ்சம் முழுவதும் வியாபித்து நிற்கும் சத்திய சொருபத்தை நேருக்கு நேராக ஒருவர் தரிசிக்க வேண்டுமாயின், அவர் மிக மிகத் தாழ்ந்த உயிரையும் தன்னைப் போலவே நேசிக்கக் கூடியவராக இருக்கவேண்டும். அந்த நிலையை அடைய ஆர்வம் உள்ளவர் எவரும், வாழ்க்கையின் எந்தத் துறையிலிருந்தும் விலகி நிற்க முடியாது. அதனுலேயே, சத்தியத்தினிடம் எனக்கு உள்ள பக்தி, என்னை அரசியல் துறையிலும் இழுத்துவிட்டிருக்கிறது. மதத்திற்கும் அரசியலுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்று கூறுவோர், மதம் என்ருல் என்ன என்பதையே அறியாதவர்களாவர். இதைச் சிறிதும் தயக்கமின்றி, ஆயினும் முற்றிலும் பணிவுடன் நான் கூறமுடியும்.''

அரசியலில் காந்திஜி ஏன் தமது வாழ்க்கையையே அர்ப்பணம் செய்தார் என்பதற்கு இதைக் காட்டிலும் சிறந்த விளக்கம் வேறு எதுவும் இருக்க முடியாது.

கண்டிப்பான கொள்கையிலிருந்தும் கட்டுப்பாடுகளி லிருந்தும் சிறிதும் வழுவாத ஓர் துறவி என்று காந்திஜியைக் கூறலாம். உடலுக்கு இன்பம் அளிப்பதற்கான எல்லாச் சாத னங்களையும் அவர் அறவே வெறுத்தார். உணவிலும் அவர் பல கண்டிப்பான நிபந்தனைகளை அனுசரித்து வந்தார். பசும் பால் சாப்பிடுவதைக் கூட அவர் ஆதரிக்கவில்லை. இதிலிருந்து, அவர் நெருங்கிப் பழகுவதற்கே தகுதியற்றவர் என்று கருதுவது முற்றிலும் தவறாகும். அதற்கு மாறாக, அவர் மனத்தைக் கவரும் ஒரு தோழராக இருந்தார். எவ்விஷயத்தைப் பற்றியும் அவர் கூறும் ஆலோசனை அற்புதமாகவும், ஆழ்ந்த கருத்துடனும் இருக்கும். அதே சமயம் அவரது பேச்சுக்களில் நகைச் சுவை ததும்புவதும் ஒரு விசேஷமாகும்.

வெளி உலகிற்கு இந்தியாவின் சிறப்பை விளக்கிக்கூறுபவர் என்று காந்திஜியைப்பற்றிக் கூறப்படுகிறது. அது மாத்திர மல்ல, இந்தியாவைப்பற்றி இந்திய மக்களுக்கு விளக்கிக் கூறிய வரும் அவர்தான். இந்தியாவின் உண்மையான இருதயம் படா டோபத்திலும் மேநாட்டு நாகரிகத்திலும் ஆழ்ந்துள்ள நகரங் களில் இல்லை, ஏழு லட்சம் கிராமங்களில்தான் இருக்கிறது என்பதை அவர் அறிந்து, அதை மக்களுக்கும் விளக்கிக் கூறினார். சாதாரண கிராமவாசியின் எளிய வாழ்க்கையுடன் அவர் இரண்டறக் கலந்ததாலேயே அவர் இந்தியாவின் உள்ளத்தை, கோடிக்கணக்கான இந்திய மக்களின் உள்ளத்தைக் கவர முடிந்தது.

இந்தியாவின் மகத்தான சம்பிரதாயங்களில் காந்திஜியின் அகிம்சைக் கொள்கையும் ஒன்றாகும். எனினும் ஏசுநாதரின் உப தேசங்களை கிறிஸ்தவர்கள் செயலில் கொண்டுவரத் தவறியது போல், இந்திய மக்களும் காந்திஜியின் உபதேசத்தை நடை முறையில் அனுசரிக்க பல தடவைகளிலும் தவறியிருக்கிறார்கள். இருந்தாலும், அந்த உபதேசம் நிரந்தரமான மகத்துவம் வாய்ந்த தென்பதை சாதாரண மக்கள் நன்கு அறிந்திருக்கின்றனர்.

